# அல்லாஹ்
# எங்கே இருக்கின்றான்?

தொகுப்பு:
**கலாநிதி U.L. அஹ்மத் அஷ்ரப்** (Ph.D. Al-Azhar)
தலைவர், தாறுல் ஹதீஸ், கொழும்பு.
உதவிப் பேராசிரியர், மன்னர் காலித் பல்கலைக்கழகம்,
அப்ஹா, சஊதி அரேபியா.

بسم الله الرحمن الرحيم

குர்ஆன், ஹதீஸ் ஆகியவற்றின் தீர்ப்புகளுக்கிணங்க அல்லாஹ் ‘அர்ஷ்” மீது உள்ளான் என நம்புவது ஒவ்வொரு முஸ்லிமினதும் கடமையாகும். ‘அர்ஷ்” என்ற சிம்மாசனம் ஏழு வானங்களுக்கு அப்பால் உள்ளது. அதுதான் சிருஷ்டிகளின் (படைப்பினங்களின்) இறுதிப்பகுதியாகும். இதே நம்பிக்கையில்தான் ஸஹாபாக்கள், தாபியீன்கள், வாழ்ந்து வந்தனர். அதே போன்று மத்ஹபுகளுக்குரிய நான்கு இமாம்களாகிய அபூஹனீபா (ரஹ்), மாலிக் (ரஹ்), ஷாபிஈ (ரஹ்), அஹ்மத் பின் ஹன்பல் (ரஹ்) மற்றும் ஹதீஸ் கலையில் தேர்ச்சி பெற்ற இமாம்களாகிய புஹாரி (ரஹ்), முஸ்லிம் (ரஹ்), அபூதாவூத் (ரஹ்), திர்மிதீ (ரஹ்), நஸாஈ (ரஹ்), இப்னுமாஜா (ரஹ்) ஆகியோர்களும் இக்கொள்கையைத் தான் வலியுறுத்தியுள்ளார்கள். முஸ்லிம்கள் மத்தியில் பிரபல்யமான முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களும் இக்கொள்கையை வலியுறுத்துகிறார்கள்.

# அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்பதை ஊர்ஜிதப் படுத்தும் சில குர்ஆன் வசனங்களும் அவைகளுக்கான விளக்கங்களும்.

(1) ﴿ ٱلرَّحۡمَٰنُ عَلَى ٱلۡعَرۡشِ ٱسۡتَوَىٰ ﴾ (سورة طه : الآية : 5)

'அர்ரஹ்மான் (அல்லாஹ்) அர்ஷின் மேலே உள்ளான்'
**(தாஹா : 05)**

இத்திருவசனத்தில் கூறப்பட்டுள்ள 'இஸ்தவா' என்ற அரபுப்பதத்திற்கு மேலே உள்ளான் என்று அர்த்தமாகும். இவ்வியாக்கியானத்தையே அபுல் ஆலியா (ரஹ்), முஜாஹித் (ரஹ்) போன்ற தாபிஈன்களும் வழங்கியுள்ளனர்.

(ஸஹீஹுல் புகாரி: 4 / 387)

(2) ﴿ ٱللَّهُ ٱلَّذِي خَلَقَ ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضَ وَمَا بَيۡنَهُمَا فِي سِتَّةِ أَيَّامٖ ثُمَّ ٱسۡتَوَىٰ عَلَى ٱلۡعَرۡشِۖ ﴾
**(سورة السجدة : 4)**

'வானம், பூமி ஆகியவைகளையும், அவ்விரண்டிற்குமிடையில் உள்ளவைகளையும், அல்லாஹ் ஆறு நாட்களில் படைத்து, பின்பு அர்ஷின் மீதாகி விட்டான்.
**(ஸஜ்தா : 04)**

(3) ﴿ ءَأَمِنتُم مَّن فِي ٱلسَّمَآءِ أَن يَخۡسِفَ بِكُمُ ٱلۡأَرۡضَ فَإِذَا هِيَ تَمُورُ ١٦ أَمۡ أَمِنتُم مَّن فِي ٱلسَّمَآءِ أَن يُرۡسِلَ عَلَيۡكُمۡ حَاصِبٗاۖ فَسَتَعۡلَمُونَ كَيۡفَ نَذِيرِ ١٧ ﴾ (سورة الملك : الآية : 16 – 17) ( " في السماء " بمعنى " على السماء " ؛ لأن من معاني "في" : الاستعلاءَ , قال تعالى : ﴿ وَلَأُصَلِّبَنَّكُمۡ فِي جُذُوعِ ٱلنَّخۡلِ ٧١ ﴾ (سورة طه:الآية : 17) أي على جذوع النخل ( مغني اللبيب لابن هشام 515/2 )

'வானத்தின் மேலே இருப்பவன் உங்கள் மீது பூமியைக் கவிழ்த்து விட மாட்டான் என அச்சமின்றி இருக்கின்றீர்களா? ! **(முல்க் : 16-17)**

(4) ﴿ يَخَافُونَ رَبَّهُم مِّن فَوْقِهِمْ وَيَفْعَلُونَ مَا يُؤْمَرُونَ ۩ ﴾ (سورة النحل :الآية : 5)

‘(வானவர்கள்) அவர்களுக்கு மேலே உள்ள இரட்சகனை அஞ்சுகிறார்கள், மேலும் அவர்களுக்கு கட்டளையிடப்பட்டவைகளை நிறைவேற்றுகிறார்கள்.

**(அந்நஹ்ல் : 05)**

(5) تَعْرُجُ ٱلْمَلَٰٓئِكَةُ وَٱلرُّوحُ إِلَيْهِ فِى يَوْمٍ كَانَ مِقْدَارُهُۥ خَمْسِينَ أَلْفَ سَنَةٍ ﴿٤﴾ ﴾ (سورة المعارج : الآية : 3-4)

‘மலக்குகளும், பரிசுத்த ஆவியும் (ஜிப்ரீலும்) ஐம்பதாயிரம் வருடம் அளவுள்ள ஒரு நாளில் அவனை (அல்லாஹ்வை) நோக்கி ஏறிச் செல்வார்கள்.

**(மஆரிஜ் : 3 - 4)**

(6)﴿ إِلَيْهِ يَصْعَدُ ٱلْكَلِمُ ٱلطَّيِّبُ ، وَٱلْعَمَلُ ٱلصَّٰلِحُ يَرْفَعُهُۥ ﴾ (سورة فاطر : الآية : 10)

‘அவனை (அல்லாஹ்வை) நோக்கியே அழகிய வார்த்தை ஏறிச் செல்கிறது.

**(பாதிர் : 10)**

(7) ﴿ وَقَالَ فِرْعَوْنُ يَٰهَٰمَٰنُ ٱبْنِ لِى صَرْحًا لَّعَلِّىٓ أَبْلُغُ ٱلْأَسْبَٰبَ ﴿٣٦﴾ أَسْبَٰبَ ٱلسَّمَٰوَٰتِ فَأَطَّلِعَ إِلَىٰٓ إِلَٰهِ مُوسَىٰ وَإِنِّى لَأَظُنُّهُۥ كَٰذِبًا ﴾ (سورة غافر : 36 – 37)

‘பிர்அவ்ன் (தனது முதலமைச்சர்) ஹாமானை நோக்கி பின்வருமாறு கூறினான் : ஹாமானே! எனக்கு ஒரு கோபுரத்தைக் கட்டு, அதன் மூலம் வானங்களின் வாயில்களை அடைந்து மூஸாவின் இறைவனைப் பார்க்கப் போகின்றேன். மூஸா பொய் சொல்கிறார் என்றே கருதுகின்றேன். **(ஹாபிர் : 36 – 37)**

இதன் மூலம் மூஸா (அலை) அவர்கள் அல்லாஹ் வானத்திற்கு மேலே உள்ளான் என்று பிர்அவ்னுக்குக் கூறினார்கள் என்பதும், அவன் அதனை

நம்பவில்லை என்பதும் தெளிவாகிறது. எனவே, அல்லாஹ் அர்ஷின் மீது உள்ளான் என்பதை நிராகரிப்பவர்கள் பிர்அவ்னின் ஆதரவாளர்களாக கருதப்படுவர்.

(08) ﴿ وَضَرَبَ ٱللَّهُ مَثَلًا لِّلَّذِينَ ءَامَنُوا۟ ٱمْرَأَتَ فِرْعَوْنَ إِذْ قَالَتْ رَبِّ ٱبْنِ لِى عِندَكَ بَيْتًا
فِى ٱلْجَنَّةِ وَنَجِّنِى مِن فِرْعَوْنَ وَعَمَلِهِۦ وَنَجِّنِى مِنَ ٱلْقَوْمِ ٱلظَّٰلِمِينَ ﴿١١﴾ ﴾ **(سورة التحريم : 11)**

‘பிர்அவ்னின் மனைவி (ஆஸியா) ‘இறவைா! உனது சன்னிதானத்தில், சுவர்க்கத்தில் ஒரு வீட்டை எனக்குக் கட்டுவாயாக, என்று பிரார்த்தித்தார்கள். **(அத்தஹ்ரீம் : 11)**

روى البخاري في صحيحه (7423) عن أبي هريرة – رضي الله عنه – عن النبي – صلى الله عليه وسلم – أنه قال : ............ فإذا سألتم الله فسلوه الفردوس ؛ فإنه أوسط الجنة وأعلى الجنة , وفوقه عرش الرحمن , ومنه تفجَّر أنهار الجنة .

‘நீங்கள் அல்லாஹ்விடத்தில் கேட்டால், பிர்தௌஸ் எனும் சுவர்க்கத்தைக் கேளுங்கள். அது தான் சுவர்க்கத்தின் விசாலமான பகுதியாகும். சுவர்க்கத்தின் உயர்ந்த பகுதியும் ஆகும். அந்த பிர்தௌஸிற்கு மேலே ரஹ்மானின் அர்ஷ் உண்டு. அதிலிருந்து சுவர்க்கத்தின் நதிகள் ஊற்றெடுக்கின்றன.

**(ஆதாரம் புஹாரி : 7423)**

மேலே கூறிய குர்ஆன் வசனத்தையும், ஹதீஸையும் இணைத்துப்பார்க்கும் போது, அல்லாஹ் அர்ஷ் மீது இருக்கின்றான் என்பதும், சுவர்க்கம் அர்ஷின் கீழ் உள்ளதும் தெளிவாகிறது. சுவர்க்கவாசிகள் மறுமையில் பரிபூரண சந்திரனை பார்ப்பது போன்று இறைவனை பார்ப்பார்கள் எனக் கூறும் ஹதீஸ்களும் இதையே வலியுறுத்துகின்றன.

(09) ﴿ وَيَحۡمِلُ عَرۡشَ رَبِّكَ فَوۡقَهُمۡ يَوۡمَئِذٖ ثَمَٰنِيَةٞ ١٧ ﴾ (سورة الحاقة : 17)

‘அந்நாளில் எட்டு (வானவர்கள்) அவர்களுக்கு மேலேயுள்ள உமது இரட்கனின் அர்ஷை சுமப்பார்கள்.
**(அல்ஹாகா : 17)**

அர்ஷை வானவர்கள் சுமக்கிறார்கள் என்றால், அர்ஷின் மீதுள்ள அல்லாஹ்வை சுமக்கின்றார்கள் என்று பொருள்படாது. ஏனெனில் நாங்கள் அல்லாஹ் அர்ஷின் மீது உள்ளான் என்று கூறும்போது, அல்லாஹ் அர்ஷ் மீது உட்கார்ந்திருக்கின்றான், அல்லது தங்கியிருக்கின்றான் என்று கூறவில்லை. அர்ஷ் என்பது படைப்பினங்களின் இறுதி என்றும், அதையடுத்து அல்லாஹ் உள்ளான் என்றே கூறுகின்றோம். அல்லாஹ்வை வானவர்கள் சுமக்கின்றார்கள் என்ற கருத்து தொனிக்கக் கூடாது என்பதற்காகத் தான். அல்லாஹ் "فوقهم" (வானவர்களுக்கு மேலேயுள்ளான்) என்று கூறியுள்ளான்.

# அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்பதை ஊர்ஜிதப்படுத்தும் சில ஹதீஸ்களும் அதற்கான விளக்கங்களும்.

(1) روى البخاري (4351) ومسلم (2449) عن أبي سعيد الخدري – رضي الله عنه – عن النبي – صلى الله عليه وسلم – أنه قال : " ألا تأمنوني وأنا أمين من في السماء ، يأتيني خبر السماء صباحا ومساء " .

'வானத்திற்கு மேலே இருப்பவனிடத்தில் நான் நம்பிக்கைக்குரியவனாக இருக்கின்றேன். எனவே, நீங்கள் என்னை நம்பமாட்டீர்களா? வானத்தின் செய்தி எனக்குக் காலையிலும், மாலையிலும் வந்துகொண்டிருக்கின்றது என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஸஈதினில் குத்ரி (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**(ஆதாரம் புஹாரி : 4351, முஸ்லிம் : 2449)**

(2) روى البخاري ( 7422) ومسلم ( 2451) عن أبي هريرة – رضي الله عنه – عن النبي – صلى الله عليه وسلم – أنه قال : إن الله لما قضى الخلق كتب عنده فوق عرشه : إن رحمتي سبقت غضبي .

'அல்லாஹுதஆலா படைப்பினங்களைப் படைத்து முடித்த போது 'எனது கோபத்தை விட எனது அருள் முந்திவிட்டது, என தனது சன்னிதானத்தில், அவனது அர்ஷின் மேலே எழுதினான். என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**(ஆதாரம் புஹாரி : 7422, முஸ்லிம் : 2451)**

(3) روى مسلم ( 537) عن معاوية بن الحكم السلمي – رضي الله عنه – قال : كانت لي جارية , وصككتها صكة ، فأتيت رسول الله – صلى الله عليه وسلم – فعظم ذلك عليّ ، قلت : يا رسول الله ! أفلا أعتقتها ؟ قال : ائتني بها ، قال : فأتيته بها , فقال لها : **أين الله** ؟ قالت : في السماء ! قال : من أنا ؟ قالت : أنت رسول الله !! قال : أعتقها ؛ فإنها مؤمنة .

وقد استدل بحديث معاوية بن الحكم الإمامُ الشافعي في الأم 280/5 – كتاب الظهار – باب عتق المؤمنة في الظهار ، وفي الرسالة ص 75 الفقرة : 242 .

‘முஆவியா பின் ஹகம் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள் ‘என்னிடத்தில் ஆடு மேய்க்கும் அடிமைப் பெண்ணொருத்தி இருந்தாள். ஒரு தினம் அப்பெண்ணை நான் கடுமையாக அடித்து விட்டேன். நபி (ஸல்) அவர்களிடம் அப்பெண்ணை விடுதலை செய்யட்டுமா? ஏன வினவ, அவளை தன்னிடம் அழைத்து வருமாறு கூறினார்கள், நான் அவளைக் கொண்டு வந்த போது அவளிடம், அல்லாஹ் எங்கே உள்ளான் என வினவினார்கள். அதற்கு அவள் வானத்திற்கு மேலே இருக்கின்றான். எனக் கூறினாள். பின்பு நான் யார் என வினவியபோது அதற்கு அவள் நீங்கள் அல்லாஹ்வின் தூதர் எனப் பதிலளித்தாள். உடனே அப்பெண் மு.ஃ.மினானவள், அவளை விடுதலை செய்யுமாறு பணித்தார்கள்.

**(ஆதாரம் முஸ்லிம் : 537)**

(4) روى مسلم (2713) عن أبي هريرة – رضي الله عنه – قال : كان رسول الله – صلى الله عليه وسلم – يأمرنا إذا أخذنا مضجعنا أن نقول ... : وفيه "وأنت الظاهر , فليس فوقك شيء ...

‘இறைவா! நீயே மேலேயிருக்கிறாய், உனக்கு மேலே ஒன்றும் இல்லை என்ற துஆவை நபி (ஸல்) அவர்கள் உறக்கத்திற்குச் செல்லும் போது ஓதுமாறு ஏவக்கூடியவர்களாக இருந்தார்கள் என அபூ ஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**(ஆதாரம் முஸ்லிம் : 2713)**

(5) روى مسلم (2941) عن جابر بن عبد الله – رضي الله عنهما – في صفة حجة النبي – صلى الله عليه وسلم – : فخطب الناس [بعرفة] وقال ... : وقد تركتُ فيكم ما لن تضلوا بعده إن اعتصمتم به ؛ كتابَ الله ، وأنتم تُسألون عني ، فما قائلون ؟ قالوا : نشهد أنك قد بلغتَ ، وأديتَ ونصحتَ ، فقال بأصبعه السبابة يرفعها إلى السماء وينكتها إلى الناس : اللهم اشهدْ ! اللهم اشهدْ !! اللهم اشهدْ !!! ... الحديث .

‘நபி (ஸல்) அவர்கள் அரபா தினம் மக்களுக்கு உபதேசம் செய்து விட்டு, நீங்கள் மறுமையில்

என்னைப் பற்றி வினவப்படுவீர்கள், அப்போது நீங்கள் என்ன கூறுவீர்கள் எனக் கேட்டார்கள். அதற்கு மக்கள் ‘நீங்கள் எத்திவைத்தீர்கள், (கடமையை) நிறைவேற்றினீர்கள், உபதேசம் புரிந்தீர்கள் என நாங்கள் சாட்சி கூறுவோம் என்று கூறினார்கள். இதைக் கேட்ட நபியவர்கள், தனது சுட்டு விரலை வானத்தை நோக்கி உயர்த்தி பின்பு மக்களை நோக்கி இறைவா! நீயே சாட்சி, நீயே சாட்சி என மூன்று தடைவகள் சுட்டிக்காட்டிக் கூறினார்கள்.

**(ஆதாரம் முஸ்லிம் : 2941)**

(6) روى مسلم (3525) عن أبي هريرة - رضي الله عنه - قال : قال رسول الله- صلى الله عليه وسلم - "**والذي نفسي بيده !** ما من رجلٍ يدعو امرأته إلى فراشها فتأبى عليه إلا كان الذي في السماء ساخطا عليها حتى يرضى عنها .

‘ஒரு கணவன் தன் மனைவியை உடலுறவுக்கு அழைத்தும் அவள் மறுத்தால், வானத்திற்கு மேல் இருப்பவன், கணவன் திருப்தியடையும் வரை அப்பெண்ணின் மீது கோபமடைகின்றான் என்று நபியவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**(ஆதாரம் முஸ்லிம் : 3525)**

(7) روى البخاري (7420) عن أنس- رضي الله عنه – قال : كانت زينب بنت جحش – رضي الله عنها – **تفخر على أزواج النبي** – صلى الله عليه وسلم – تقول : زوّجكن أهاليكن ، وزوّجني الله تعالى من فوق سبع سموات .

‘ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (றழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் ஏனைய மனைவிகளிடத்தில் ‘உங்களை உங்கள் குடும்பத்தினர் திருமணம் செய்து வைத்தார்கள், என்னை அல்லாஹ் ஏழு வானங்களுக்கு மேலிருந்து திருமணம் செய்து வைத்தான் என்று பெருமிதமாகக் கூறுவார்கள் என அனஸ் (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**(ஆதாரம் புஹாரி : 7420)**

## பகுத்தறிவு ரீதியான ஆதாரங்கள்.

அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்றால், அர்ஷ் மீது உட்கார்ந்திருக்கின்றான் என்பது அர்தமல்ல. அர்ஷ் என்பது படைப்பினங்களின் இறுதிப் பகுதியாகும். அதையடுத்து அல்லாஹ் உள்ளான்.

இதை மேலும் விளக்குவதாயின், அல்லாஹுதஆலா ஆதி முதல் அவன் தனிமையாகவே இருந்தான். முதல் படைப்பை, சிருஷ்டியைப் படைத்த விதத்தில் மூன்று வகையான இடம்பாடுகள் உள்ளன :

அ) அல்லாஹ் முதல் படைப்பைத் தனது (ذات) தாத் (மெய்பொருளின்) மீது படைத்திருக்க வேண்டும்.

ஆ) அல்லாஹ் முதல் படைப்பை தனது மெய்ப்பொருளுக்கு வெளியே படைத்து, அதனுள் நுழைந்திருக்க வேண்டும்.

இ) அல்லாஹ் முதற் படைப்பை தனது மெய்பொருளுக்கு வெளியே படைத்து, அதனுள் நுழையாமல் வேறுபட்டிருக்க வேண்டும்.

இம்மூன்றில், முதல் இரண்டு இடம்பாடுகள் அசாத்திமானவையாகும். ஏனெனில் இறைவனின் மெய்ப்பொருள் படைப்பினங்களின் இடமாகவோ, அல்லது இறைவன் சிருஷ்டிகளில் நுழைவதோ பகுத்தறிவுக்கும், தேவையற்றவன் என்ற குர்ஆன், ஹதீஸ் அடிப்படைகளுக்கும் முரணானதாகும். எனவே சிருஷ்டிகளைப் படைத்த இறைவன், அவைகளில் நுழையாமல் வேறுபட்டிருக்கின்றான் என்பது நிரூபனமாகிறது.

அல்லாஹ்வுக்கு இடம் இல்லை என்று சிலர் வாதிக்கின்றனர். இது தெளிவில்லாத வாதமாகும். அவனுக்கு இடமில்லை என்பதன் பொருள், அவன் பிரபஞ்த்தில் ஒரு இடத்தை எடுத்துக் கொள்ளவில்லை. படைப்பினங்கள் ஒன்றிலும் தங்கியிருக்கவில்லை என்று

இருந்தால் அது ஏற்றுக் கொள்ளக் கூடியதாகும். அவ்வாறு இல்லாமல் அவன் சர்வ சிருஷ்டிகளுக்கு அப்பால் இல்லை என்பது அவ்வாதத்தின் பொருளாகவிருந்தால், அது குர்ஆன், ஹதீஸ், பகுத்தறிவுக் கோட்பாடுகளுக்கு முரணான வாதமாகும்.

எனவே, அல்லாஹுதஆலா ஏழு வானங்களுக்கு மேலேயுள்ள சிருஷ்டிகளின் இறுதியாகிய அர்ஷ் மீது உள்ளான் எனக் கூறினால், அவனுக்கு சடம் கற்பித்ததாகவோ, அல்லது ஒரு படைப்பினத்தின் பால் தேவையுடையவனாகின்றான் என்றோ ஆகிவிடாது.

## மனிதனில் அமைந்துள்ள உள்ளுணர்வு ரீதியான ஆதாரங்கள்.

அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்பதை மனிதனில் அமைந்துள்ள மாற்றமுடியாத உள்ளுணர்வுகள் நிரூபிக்கின்றன. எந்த மதத்தைச் சேர்ந்த ஒரு மனிதனும் மிகவும் இக்கட்டான நிலையில், அல்லது ஆபத்தான நிலையில் தனது இறைவனை நோக்கும் போது, அவனை அறியாமலே அவனது பார்வை வானத்தை நோக்கிச் செல்கிறது. வலது பக்கமோ, இடது பக்கமோ, கீழேயோ அவனது பார்வை செல்வதில்லை.

﴿فِطْرَتَ ٱللَّهِ ٱلَّتِى فَطَرَ ٱلنَّاسَ عَلَيْهَا ۚ لَا تَبْدِيلَ لِخَلْقِ ٱللَّهِ ۚ﴾ (سورة الروم : الآية : 30 )

‘(இஸ்லாம் என்பது) அல்லாஹ் மனித இனத்திற்கு வழங்கிய இயற்கை உணர்வு, அல்லாஹ்வின் படைப்பை மாற்ற முடியாது. **(அர்ரூம் : 30)**

روى البخاري (1359) ومسلم (6697) عن أبي هريرة – رضي الله عنه — عن النبي – صلى الله عليه وسلم — أنه قال : ما من مولود إلا يولد على الفطرة ، فأبواه يهودانه ويمجسانه ... الحديث .

‘ஒவ்வொரு குழந்தையும் (இஸ்லாம் என்ற) இயற்கை உணர்விலே பிறக்கின்றது. (ஆனால்) அதன் தாய், தந்தையர்களே அதனை யூதனாக, கிறிஸ்தவனாக, நெருப்பு வணங்கியாக மாற்றிவிடுகிறார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

**(ஆதாரம் புஹாரி : 1359, முஸ்லிம் : 6697)**

## <u>மிக முக்கியமான இமாம்களின் கூற்றுக்கள்.</u>

روى الإمام البيهقي في كتاب الأسماء والصفات ص 408 عن الإمام الأوزاعي المتوفى 157هـــ أنه قال : كنا – والتابعون متوافرون – نقول : إن الله – تعالى ذِكرُه – فوق عرشه ، ونؤمن بما وردتِ السنة به من صفاته – جل وعلا – .

وصححه الذهبي في تذكرة الحفاظ 179/1، وابن حجر في فتح الباري 417/13.

‘அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்றும், ஸுன்னாவில் வந்த அல்லாஹ்வின் தன்மைகளை ஈமான் கொள்வோம் என்றும் தாபிஈன்கள் நிறைவாகக் காணப்படும் காலத்தில் நாங்கள் கூறிக்கொண்டிருந்தோம் என அவ்ஸாஈ (ரஹ்) அவர்கள் கூறினார்கள். **(நூல் : அல் அஸ்மா வஸ்ஸிபாத் : 408)**

روى الإمام البخاري في كتاب خلق أفعال العباد ص 10 عن عبد الله بن المبارك المتوفى سنة 181هـــ : لا نقول كما قالت الجهمية : إنه في الأرض هنا ، بل على العرش استوى ، وقيل له : كيف نعرف ربنا ؟ قال : فوق سمواته على عرشه .

‘ஜஹ்மீய்யாக்கள் கூறுவது போல், இங்கே பூமியிலே உள்ளான் என்று கூறமாட்டோம். அவன் அர்ஷ் மீது உள்ளதாகத் தான் கூறுகிறோம். எங்கள் இறைவன் (ஏழு) வானங்களுக்கு மேலே அர்ஷ் மீது உள்ளான் என அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

**(நூல் : கல்கு அப்ஆலில் இபாத் : 10)**

روى الإمام البخاري في كتاب خلق أفعال العباد ص 18 عن يزيد بن هارون المتوفى سنة 206هـ أنه قال : من زعم أن الرحمن على العرش استوى على خلاف ما يقر فى قلوب العامة فهو جهمي .

'அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்பதை பொது மக்கள் உள்ளங்களில் உள்ளதற்கு முரணாக வாதிப்பவன் ஜஹ்மி ஆவார் என யஸீத் பின் ஹாரூன் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்.

**(கல்கு அப்ஆலில் இபாத் : 18)**

قال الإمام أبو الحسن الأشعري المتوفى سنة 324هـ في كتابه مقالات الإسلاميين واختلاف المصلين 345/1 : جملةُ ما عليه أهل الحديث والسنة : الإقرارُ بالله وملائكته وكتبه ورسله ، وما جاء من عند الله ، وما رواه الثقات عن رسول الله لا يردون من ذلك شيئا ، وأن الله سبحانه إله واحد ، فرد صمد ، لا إله غيره ، لم يتخذ صاحبة ولا ولدا ، ثم قال : **وأن الله سبحانه على عرشه كما قال : الرحمن على العرش استوى .**

'அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்று நம்புவது அஹ்லுஸ் ஸுன்னாக்களின் நம்பிக்கையாகும் என அபுல் ஹஸன் அஷ்அரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**(மகாலதுல் இஸ்லாமிய்யீன் : 1/345)**

قال الشيخ عبد القادر الجيلاني المتوفى سنة 561هـ فى كتابه الغنية 54/1 – 56 : وهو بجهة العلو ، مستو على العرش ، محتو على الملك ، محيط علمه بالأشياء ، ثم قال : ولا يجوز وصفه بأنه في كل مكان ، بل يقال : إنه في السماء على العرش كما قال جل شأنه : الرحمن على العرش استوى ، وينبغي إطلاق الاستواء من غير تأويل ، وأنه استواء الذات على العرش ، لا على معنى القعود والمماسة كما قالت الجرسمية والكرامية ، ولا على من العلو والرفعة كما قالت الأشعرية ، ولا على الاستيلاء والغلبة كما قالت المعتزلة ؛ لأن الشرع لم يرد بذلك ، ولا نُقل عن أحد من الصحابة والتابعين من السلف الصالح من أصحاب الحديث ذلك ، بل المنقول عنهم حملُه على الإطلاق .

‘அல்லாஹ் மேலே உள்ளான், அவன் எல்லா இடத்திலும் இருக்கின்றான் என்று கூறமுடியாது. வானத்திற்கு மேலே அர்ஷ் மீது உள்ளான் என அப்துல் காதிர் ஜீலானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**(ஆதாரம் அல்குன்யா 1/54 – 56)**

## அல்லாஹ் அர்ஷ் மீது உள்ளான் என்ற கொள்கையை நிராகரிப்பதற்குரிய சட்டம்.

மேற் கூறப்பட்ட குர்ஆன் வசனங்கள், ஹதீஸ்கள் ஆகியவற்றை அறிந்து, விளங்கிய பின்பும் அல்லாஹ் அர்ஷ் மீது இல்லை எனப் பிடிவாதமாயிருந்தால் அவர் காபிர் ஆகிவிடுவார். (والعياذ بالله) ஏனெனில் திட்டவட்டமான குர்ஆன், ஹதீஸ் சட்டங்களை நிராகரிப்பவனாக ஆகிவிடுகின்றான். இதே பொருள் படத்தான் இமாம்கள் பத்வாக்கள் வழங்கியுள்ளார்கள். அவற்றில் சிலதை கீழே தருகின்றோம்.

(1) قال أبو مطيع الحكم بن عبد الله البلخي : سألت أبا حنيفة عمن يقول : لا أعرف ربي في السماء أو في الأرض ! فقال : : قد كفر ؛ لأن الله يقول : الرحمن على العرش استوى ، وعرشه فوق سمواته( الفقه الأبسط رواية أبي مطيع عن أبي حنيفة : 49)

‘எனது இரட்சகன் வானத்திலா, பூமியிலா என்று எனக்குத் தெரியாது என்று கூறுபவன் காபிர் ஆகிவிட்டான். ஏனெனில் ரஹ்மான் அர்ஷ் மீது உள்ளான் என்று கூறியுள்ளான் என இமாம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

**(அல்பிக்ஹுல் அப்ஸத் ரிவாயது அபில் முதீ அன் அபீஹனீபஹ்)**

(2) قال محمد بن يوسف الفِرْيابي : من قال : إنه ليس على عرشه فهو كافر.

( خلق أفعال العباد للإمام البخاري : 19)

‘எவர் அல்லாஹ் அர்ஷ் மீது இல்லை என்று கூறுகின்றாரோ அவர் காபிர் ஆவார் என முஹம்மத் பின் யூஸுப் அல்பிர்யாபீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**(நூல் : கல்கு அப்ஆலில் இபாத் : 19)**

(3) قال الإمام ابن خزيمة : من لم يُقرّ بأن الله على عرشه قد استوى فوق سبع سمواته فهو كافر بربه يستتاب ، فإن تاب ، وإلا ضُربت عنقه ، وألقى على بعض المزابل حيث لايتأ ذى المسلمون والمعاهَدون بنتن ريح جيفته ، وكان ماله فيئا لا يرثه أحد من المسلمين إذ المسلم لا يرث الكافر ( كتاب معرفة علوم الحديث للحاكم ص 84)

‘அல்லாஹ் ஏழு வானங்களுக்கு மேலுள்ள அர்ஷ் மீது உள்ளான் என்பதை ஏற்றுக்கொள்ளாதவன் காபிர். அவனிடத்தில் தவ்பா கோரப்பட வேண்டும், தவ்பாச் செய்யாவிடின் அவனின் கழுத்தை வெட்டி குப்பை மேட்டில் வீசவேண்டும் என இப்னு குஸைமா (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

**(ம.ஃ.ரிபது உலூமில் ஹதீஸ் : 84)**